உ

# தமிழக
# அறங்காவலர் மாநாடு
## திருச்சி




23 - 9 - 70



தவத்திரு

## குன்றக்குடி அடிகளார்

அவர்கள் ஆற்றிய

## வாழ்த்துரை

உ

திருச்சியில் நடைபெற்ற
தமிழக அறங்காவலர்கள் மாநாட்டில்

## தவத்திரு குன்றக்குடி அடிகளார்

அவர்கள் ஆற்றிய

## வாழ்த்துரை.

## (23—9—70)

---

அன்பிற் சிறந்த அனைவருக்கும் நமது நல்வாழ்த்துக்கள்! முறை நலமும் மொழிநலமும் சேர்ந்த தமிழக அரசின் அறநிலையத்துறை அமைச்சர் அருமருந்தன்ன மாண்புமிகு கே. வி. சுப்பையா அவர்களே! பத்திமைத் துறையில் படிந்த அறநிலைய ஆட்சித்துறை ஆணையர் கே. எஸ். நரசிம்மன் அவர்களே! அறநிலைய ஆட்சித் துணை ஆணையர்களே! திருக்கோயில்களைக் காத்து நிற்கும் திருத்தொண்டுகளில் ஈடுபட்டிருக்கும் அறக் காப்பாளர்களே! இம் மாநாட்டின் தலைவராகிய கெழுதகைக் கேண்மைமிக்க அன்பில் அவர்களே! உங்கள் அனைவருக்கும் நமது நெஞ்சுநிறைந்த வரவேற்பு! வாழ்த்துக்கள்!

நாம் அனைவரும் கூடியிருக்கும் இந்த நேரம் ஒரு நெருக்கடிமிக்க வரலாற்றுக் கட்டமாகும். நமது சமய நெறியை, நமது சமய மரபுகளை, நமது சமய நிறுவனங்களை நாமே பேணிக் காத்துக்கொள்ளக்கூடிய கடமை, நம்முன்னே இருக்கிறது. மதமாற்றக் கொடுமைகளையும், நஞ்சனைய நாத்திக வாதத்தையும், மனிதப் பண்புக்கு

மாருன வன்முறைமிக்க சித்தாந்தங்களேயும் நாம் சந்திக்கவேண்டியதிருக்கிறது. இந்தக் காலக் கட்டத்தில் தான் நம்முடைய பொறுப்புமிக்க கடமையுணர்வுக்குச் சோதனை ஏற்பட்டிருக்கிறது. இந்தச் சோதனையில் நாம் வெற்றி காணவேண்டும். ஆனுல், இந்த மாநாட்டின் கவனத்திற்கு அடக்கமுடன் ஒரு செய்தியை நினைவுக்குக் கொண்டுவருகிரேும். மேற்கூறிய மதமாற்றக் கொடுமைகளை – நஞ்சனைய நாத்திகவாதத்தை – வன்முறைசார்ந்த கொடிய சித்தாந்தங்களை வாளா எதிர்ப்பதனுல்மட்டும் அவை மாரு. இக்குறைகள் தோன்றியதற்குரிய காரணங்களை ஆராய்ந்து, அக்காரணங்களையே மாற்ற வேண்டும் என்பது நமது கருத்து. மண்ணில் இட்ட விதைகள், ஒன்றுக்கு முக்கால் முளேக்கத் தவரு. அதுபோலத்தான் மனிதரிடத்தில் எழும்பும் எந்த வினவும் - எந்த நிராசையும், எந்த அதிருப்தியும் தேங்கி நின்று அழிந்து விடாது. அவை, அடிபடும் அரவத்தைப் போலக் காரணம் மாறுகிற வரையில் மீண்டும் மீண்டும் எழுந்து வந்துகொண்டேயிருக்கும்; காலத்திற்குக் காலம் வளரவும் செய்யும். ஆதலால், உணர்ச்சிபூர்வமாக மட்டுமல்லாமல், அறிவுபூர்வமாகவும் ஆக்க ரீதியாகவும் நாம் இந்தச் சிக்கல்களை அணுகவேண்டும். இந்தச் சித்தாந்தங்களில் ஈடுபட்டிருப்பவர்களும் நம்மவர்களே! நல்லவர்களும்கூட. மாணிக்கவாசகரும் இவர்களை "ஆப்தமானவர்கள்" என்றே குறிப்பிடுகின்ருர். நம்மைப் பொறுத்தவரையில் இன்றைய நாத்திக இயக்கத்தின் தலைவராக உள்ள, தலைவர் பெரியார் நமக்கு மிகவும் ஆப்தமானவர்; நமக்கு மிகவும் வேண்டியவர். இங்குச் சர்ச்சைக்குரியவர் பெரியாரல்லர். அவருடைய கொள்கைகள் – அவருடைய கொள்கைகளின் தோற்றக் களன், சமுதாயத்தின் நடைமுறையில் அவருக்கேற்பட்ட அதிருப்தியே என்பது வெளிப்படை. அந்த அதிருப்திக்குரிய நிலைமைகளைத்தான் நாம் ஆராய

வேண்டும். அதுபோலவேதான் பொதுவுடைமை இயக்கத்தினர், நாத்திகர்கள். அவர்களும் நமக்கு நண்பர்களே! அவர்களும் சமூகத்தால் இழைக்கப்பட்ட அநீதிகளை மையமாகக்கொண்டுதான், அதுவும் அநீதிகளை இழைத்தவர்கள், கடவுள்பக்தர்கள் என்று தம்மைச் சொல்லிக்கொண்டவர்கள் இருந்தமையைக் கண்டுதான் நாத்திகர்களாயிருக்கிறார்கள். இங்கேயும் ஆராய வேண்டியது காரியமல்ல, காரணங்களேயாம். ஆதலால், பரிவும் இடுக்கணும் தவிர்த்துப் பரந்த மனப்பான்மையுடன் சூழ்நிலைகளை ஆராய்ந்து தெளிவான முடிவெடுக்க வேண்டும். அப்படி எடுக்கும் முடிவுகளை உறுதியுடன் செயற்படுத்தவும் வேண்டும். இந்தக் கடமைகள், தனிப்பட்டமுறையிலும் பொறுப்புக்கள் வழியாகவும் நம்முடைய தோள்கள்மீது சுமத்தப்பெற்றிருக்கின்றன. நம்முடைய பொறுப்புக்களை நாம் நிறைவேற்றுவது தலையாய கடமையாகும்.

தமிழகம் தெய்வமணம் கமழும் திருநாடு. இறைமணம் கமழும் இன்பத்திருநாடு; விண்ணையளந்துகாட்டி வினை மறைக்கும் திருக்கோயில்கள் நிறைந்த நாடு. கல்லெல்லாம் கலையாக்கிப் பொற்சித்திரமாக்கினர்; அவ்வழி அருளும் பொருளும் உணர்த்தினர் நமது முன்னோர். உலக மொழிகளில் பத்திமையுணர்வுக்குரிய மொழி, தமிழேயாம். நெஞ்சினை நெகிழச் செய்து உருக்கும் பாடல்கள் தமிழிலேயே உண்டு. சமயத்துறையில் நமக்குப் பழைய புகழ் நிறைய உண்டு. கங்குகரையற்ற பலதலைமுறை மகிழ்ந்து அனுபவிக்கக் கூடிய தத்துவச் செல்வங்களும் கலைச்செல்வங்களும் உண்டு. ஆனால், அவையெல்லாம் இருந்தும் துய்த்தறியாத வறுமையாளர்களாக நம்முடைய சமுதாயத்தைச் சேர்ந்த பலரிருப்பது ஒரு பெரிய குறையே!

தமிழகத்தின் சமயநெறி, மிகப்பழைய நெறி. ஆனாலும் தத்துவச் செழுமையால் அது, உயிர்ப்பற்ற பழமையாக இல்லாமல், பின்னைப்புதுநெறியாகவும் விளங்குகிறது. வளர்ந்து வரும் மார்க்ஸீயம் முதலிய சித்தாந்தங்களுக்கும் ஈடுகொடுக்கும் தகுதி, நமது சமய நெறிக்கு உண்டு. நமது சமயநெறி, "தமிழினத்தின் பேரறிவின் பயன்" என்று கௌடியும், "தமிழினத்தின் சமயநெறி அவர் தம் பேரறிவிற் பூத்துக் கனிந்ததாகும்" என்று டாக்டர் ஜி. யூ. போப்அவர்களும் பாராட்டி யுள்ளனர். தாயுமானார் "அரசாங்கத் தமர்ந்தது வைதிக சமயம்" என்று அருளியுள்ளார். நம்முடைய சமய நெறி, நம்பிக்கைக்கும் நல்வாழ்க்கைக்கும் ஏற்றது. நமது சமயத்தின் அடிப்படை உண்மைகளாக, என்றும் உள்பொருள்களாக மூன்று கொள்ளப் படுகின்றன. அவை, முறையேஇறை, உயிர், தளைஎன்பனவாகும். இந்த ஆய்வு முறை சிறந்த உயிரறிவியல் அடிப் படையில் அமைந்ததாகும். உயிர்கள் இறைவனால் படைக்கப்பட்டனஅல்ல.

உயிர்கள் அனுபவிக்கும் நன்மை தீமைகள், உயிர் களே படைத்துக் கொண்டவைகள். இறைவன் உயிர் களுக்குத் துணையே! நமதுசமயநெறிக் கருத்துக்கள், மன்பதை யுலகில் வெற்றிபெறுமானால் தன்னம்பிக்கை யுடைய ஒரு புதிய உலகமே தோன்றும்.

தமிழகச் சமயநெறியைப் பேணிப் பாதுகாக்கும் நிறுவனங்கள் இருவகையின: ஒன்று, திருக்கோயில்கள்; பிறிதொன்று திருமடங்கள். இம்மண்ணகத்தை ஆண்ட அரசர்கள், அரசின் நிலையாமையை உணர்ந்து மனித குலத்தில் அருளார்ந்த சமய வாழ்க்கையை நிரந்தரமாகப் பேணிப் பாதுகாக்க வேண்டி, இந்த இரு பெரிய அமைப்புக்களைத் தோற்றுவித்தனர். வளமான

அடிப்படையில் தோற்றுவித்து அவை என்றும் நிரந்தரமாகக் காலம் மாறினும் தாம்மாறு வகையில் பேணிப் பாதுகாக்க, வளமார் பொருள் வைப்பும் வழங்கினுர்கள். திருமடங்கள் மக்களிடையே சமய உணர்ச்சியைத் தூண்டி வளர்த்துத் தத்துவப் பயிற்சியைத் தந்து, சீலமும் நோன்பும் செறிவுமுடைய வாழ்க்கையை வழங்கித், திருவருளை நாடித் திருக்கோயில்களுக்குச் செல்ல ஆற்றுப் படுத்த வேண்டும். திருக்கோயில்கள், ஞானப்பசியெடுத்துவரும் மக்களை அதனை அனுபவிக்கச் செய்து அந்த அனுபவத்தில் நிலைபெறுத்தல் வேண்டும்.

திருக்கோயிற் படைப்பு ஒரு நுண்கலைப்படைப்பு; அருளியலும் அறிவியலும் கலந்த படைப்பு; கலையியலும் பொருளியலும் இணைந்த படைப்பு; மண்ணுக்கும் விண்ணுக்கும் இணைப்பூட்டும் கருவி. மனிதன் மிருக உணர்ச்சியிலிருந்து விலகவும், அதன்பின் முழு மனிதனுகவும், அதன்பின் தேவனுகவும் வளர்ந்து வாழத்துணை செய்வது திருக்கோயில். நமது திருக்கோயில்கள் தத்துவக் களஞ்சியங்களாகும்; வரலாற்றுச் சுவடிகளாகும்; கலைகளின் கருவூலமாகும். மனிதனின் ஊனினை உருக்கி உள்ளொளியைப் பெருக்கி உலப்பிலா வாழ்வை வழங்குவது திருக்கோயிலேயாம்.

தமிழர்கள், பலநூறு ஆண்டுகளுக்கு முன்பே திருக்கோயிலைக் காணத் தொடங்கி விட்டனர். புறநானூற்றுக் காலத்திலேயே நகரமனைய திருக்கோயில்கள் இருந்தனவாகத் தெரிகிறது. யாருக்கும் தாழாத கொற்றக்குடையுடைய வேந்தன் குடை, திருக்கோயில் முன்னே தாழ்கிறது. யாருக்கும் கூப்பாத கரங்கள் திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள தேவன் முன்னே கூம்புகின்றது. மண்ணாளும் மன்னவர்க்கும் மாண்பு சேர்ப்பவனன்றோ! இதனை அடுத்துவரும் பாடல் விளக்கும்.

"... ... ... ... ... ... ...
பணியிய ரத்தைநின் குடையே முனிவர்
முக்கட் செல்வர் நகர்வலஞ் செயற்கே
இறைஞ்சுக பெருமநின் சென்னி சிறந்த
நான்மறை முனிவ ரேந்துகை யெதிரே
... ... ... ... ... ... ... .. ...

(புறம். 6)

என்று பாண்டியன் பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதியைக் காரிகிழார் பாடுகிறார். இந்தக் கோயிலெடுக்கும் கலை, படிப்படியாக வளர்ந்து மூவேந்தர் காலத்தில் முழுவடிவம் பெற்றது. இந்தத் திருக்கோயில்களை மையமாகக் கொண்டே நமது பண்டைத் தமிழினம் வாழ்ந்து வெற்றி கண்டிருக்கிறது. சோழர்குலப் பேரரசனாகிய இராசராச சோழன் தஞ்சைப் பெருவுடையார் கோயிலை எடுத்ததும், அவன் மைந்தன் இராசேந்திர சோழன் கங்கை கொண்ட சோழீச்சரம் கட்டியதும் இதற்கு எடுத்துக்காட்டு. "கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்ற ஆன்ற பழமொழியும் தோன்றிற்று. ஏன்? நமது அப்பரடிகளும் கூடத் "திருக்கோயில் இல்லாத திருவில் ஊர்" என்று பாடினார். குடிமக்களை அகத்தாலும் புறத்தாலும் செழுமைப்படுத்திப் பாதுகாத்தது முற்காலத்தில் திருக்கோயில்களேயாகும். திருக்கோயில்கள் கல்வி பயிற்றுவிக்கும் நிலையங்களாகவும், களிப்பூட்டும் கலைக் கூடங்களாகவும், உடற்பிணிநீக்கும் மருந்தகங்களாகவும், மனிதருக்குள் ஏற்படும் மாறுபாடுகளைத் தவிர்த்து ஒப்பற்ற உறவு நெறியினை வளர்ப்பனவாகவும் இருள்நீக்கி இன்பந் தரும் நிலையங்களாகவும், பிறவா நெறி வழங்கும் திருவருட் பெட்டகங்களாகவும் விளங்கி வந்திருக்கின்றன.

திருக்கோயில்களின் இன்றியமையாத நடைமுறை மக்களைப் பத்திமைத்துறையில் ஈடுபடுத்துவதேயாகும். முன்னமேயுள்ள வழிபாட்டுமுறைகள் நமக்கு முற்றிலும் முரணானவையல்ல. திருக்கோயில் வழிபாட்டு முறையை ஆகமங்களே தெளிவாக எடுத்துக் கூறுகின்றன. ஆனால் ஆகமங்கள் வழிபாட்டுக் குரிய உணர்ச்சிகளை வழங்க வில்லை; வழங்கும் இயல்பினவுமல்ல. ஆகமங்கள் செப்புவ தெல்லாம் வழிபாட்டுச் சடங்குகளைச் செய்யும் முறை களையேயாம். ஆகமங்கள் செப்பும் செய்ம்முறைகள் பத்திமை நெறியினைத் தூண்டி வளர்க்கத் துணைசெய்யு மியல்பினவேயாம். ஆனால், சடங்குகளும் செய்ம்முறை களும் மட்டுமே சமயமாகா. இதனைச் சேக்கிழாரடிகள் அருளிச்செய்த பெரிய புராணத்தில் வரும் சடங்குகளின் சின்னமாகிய சிவகோசரியாரையும், பத்திமையின் சின்ன மாகிய கண்ணப்பநாயனாரையும் ஒப்புநோக்கி உய்த் துணர முடிகிறது. செயலுக்குத் தூண்டுவதும், செயலைப் பயனுடைய தாக்குவதும் பத்திமை யுணர்ச்சியே யாகும். பத்திமை யுணர்ச்சியை வளர்க்கும் ஆற்றல் திருமுறை களுக்கே உண்டு. ஆதலால், நமது திருக்கோயில் வழிபாட்டு முறைகள் இவ்விரண்டும் கலந்த வகையில் அமைவது அவசியமாகும்.

திருக்கோயில்களில் எழுந்தருளியிருக்கும் எம்பெருமானுக்குத் திருவருட்காப்புச் செய்யும் வகையில் நாள் தோறும் முறையாக நிகழ்த்தும் வழிபாடுகளில் ஆகமங்களின் செய்ம்முறைகளையும், முதல்வன் விரும்பிக் கேட்ட—மொழிக்கு மொழி தித்திப்பாக அமைந்த திருமுறைப் பாடல்களையும் பயன்படுத்தலாம். மேலும் சிறப்பாக, வருகின்ற பக்தர்கள் அனுபவிப்பதற்காகத் தனிப்பட்ட வகையில் செய்யப்பெறும் அருச்சனைகளில் திருமுறைகளைப் பயன்படுத்துதல் சாலப்பொருத்தமாகும். இறைவனின் ஆணையே, "அர்ச்சனை பாட்டேயாகும்"

என்பது. அகத்திய முனிவர் 'அர்ச்சனைப் பதிகம்' என்றே சில திருப்பதிகங்களை நமக்கு எடுத்துக் காட்டியுள்ளார். அப்பரடிகளின் அர்ச்சனைத் திருத்தாண்டகம், அளப்பில் சீரும் பெருமையும் உடையது. ஓதுந்தொறும் உள்ளுருக்கும் தகைமையது. இவற்றை அருளிச் செய்தவர்கள் நிறைமொழி மாந்தர்கள் ஆதலாலும், எம்பெருமான் உவந்து ஏற்றுக் கேட்டு மகிழ்ந்தமையினாலும் அவை அருளிக் கூறிய அனைத்தும் நிகழ்ந்தமையினாலும் இவைகளே மறைகள்; மறைமொழிகள்; மந்திரங்கள்! இந்தத் திருமுறைத் தமிழால் தமிழகக் கோயில்களில் அருச்சனை செய்வது திருவருளின்பத்தை யாண்டும், எல்லோரும் பெற்று அனுபவிக்கத் துணைசெய்யும். ஆதலால், நம்முடைய திருக்கோயில் அறக்காப்பாளர்கள் திருமுறைத் தமிழருச்சனையை நமது உயிருரிமை நெறியாகக் கருதிச் செயற்படுத்தவேண்டுமென்று கேட்டுக்கொள்கின்றோம். இதனைச் செயற்படுத்துதல் அவ்வளவு எளிதன்று. அதற்குக் காரணம் வேறு எதுவுமன்று; நம்முடைய பழக்கமேயாகும். பழக்கம் மாறுகிறவரையில் நாம் கவனமாகப் பின் தொடர்ந்து செயற்படுத்த வேண்டும். எல்லாத் திருக்கோயில்களிலும் மற்றைய அருச்சனைகளுக்குச் சீட்டு வழங்குவது போலவே, திருமுறைத் தமிழருச்சனை' என்று தனியே சீட்டு அச்சிட்டு, அருச்சனைக்குச் சீட்டுக்கேட்கும் பொழுது திருமுறை அருச்சனைச் சீட்டைக் கொடுத்துப் பழக்க வேண்டும். விரும்பாதவர்கள் பிற அருச்சனைச் சீட்டை வாங்கிச் செய்துகொள்ளலாம்.

அதோடு, பாடல்பெற்ற திருத்தலங்களில், விரும்புகிறவர்கள் பிரார்த்தனைக்காக அந்தத் தலத்திருப்பதிகங்களைத் திருப்பதிகம் விண்ணப்பிப்பாரைக் கொண்டு

ஓதச்செய்து இறைவனுக்கு மலர்சேர்க்கும் திருமுறைச் சாத்து நிகழ்ச்சி முறையைச் செய்தல் - செய்ய இடமளித்தல் திருவருட் பொலிவினைக் காணத் துணைசெய்யும். அதுபோலவே, குறிப்பிட்ட குறை நீங்குவதற் கென்று பாடப்பெற்ற பதிகங்களும், நலம்வேட்டுப் பாடிய பதிகங்களும் திருமுறைகளில் உள்ளன. அவற்றை இறைவன் சந்நிதியில், குறிப்பிட்ட நலங்கருதிக் குறிப்பிட்ட பதிகத்தை விரும்புவோர் விரும்பும்பொழுது, திருமுறை விண்ணப்பம் செய்வோரைக் கொண்டு ஓத, அதுபோழ்து இறைவனுக்குத் திருமுழுக்குச் செய்யவும்-மலர் தூவவும் உரிய ஏற்பாடுகளைச் செய்வது அதிகப்பயனைத் தரும்.

உதாரணமாக, நாளால், கோளால் நலிவுறுகிறவர்கள் இறைவன் சந்நிதியில், திருஞானசம்பந்தர் அருளிச்செய்த "வேயுறு தோளி பங்கன்" என்ற பதிகத்தை விண்ணப்பிக்கச் செய்து, வழிபாடு செய்து கொள்ளுதல் மூலம் அந்நலிவு நீங்கும். வெப்பு நோயால் அல்லற்படுகிறவர்கள் திருஞானசம்பம்பந்தர் அருளிச் செய்த "மந்திர மாவது நீறு" என்ற பதிகத்தை விண்ணப்பிக்கச் செய்து வழிபாடு செய்து கொள்ளுதலின் மூலம் வெப்புநோய் நீங்கி நலம் பெறுவர். இளமை மரணத்தினின்றும் தப்பித்து நெடுநாள்வாழ விரும்புபவர், திருக்கடவூர்ப் பதிகத்தை விண்ணப்பிக்கச் செய்வதன் மூலம் நிறைநல்லாயுள் பெறுவர். குடரோடு தொடக்கிய வயிற்றுவலியால் அல்லற்படுவோர், அப்பரடிகள் அருளிச் செய்த "கூற்ருயின வாறு" என்ற பதிகத்தை விண்ணப்பிக்கச் செய்வதன் மூலம் வயிற்று வலி நீங்கி வளமாக வாழ்வர். மகப்பேறு விரும்புவோர், திருக்கருகாவூர்த் திருப்பதிகத்தை விண்ணப்பிக்கச் செய்வதன் மூலம் தவருது மகப்பேறடைவர். வறுமை நீங்கி வளம்பல பெற்று வாழவிரும்புவோர் திருஞான சம்பந்தர் அருளிச்செய்த "இடரினும்" என்ற திருப்பதி

கத்தையோ, சுந்தரமூர்த்தி நாயனர் அருளிச் செய்த "பொன்செய்த மேனி" என்ற திருப்பதிகத்தையோ விண்ணப்பிக்கச் செய்வதன் மூலம் கொடிய வறுமையிலிருந்து விடுபட்டுப் பொன்னும் பொருளும் பெற்றுப் பூவுலகிற் பொலிவுற வாழ்வர். இங்குக் குறிப்பிட்டுள்ளவை சில எடுத்துக் காட்டுகளேயாம். இங்ஙனம் நமது சமுதாயத்தின் அன்ருட வாழ்க்கையோடு திருமுறைகளை இணைப்பதன் மூலம் திருக்கோயில்களும் வளம்பெறும்; நமது சமுதாயமும் வளம்பெறும். அது மட்டுமின்றி இதன் மூலம் நம்முடைய பழைய தமிழக வரலாற்றைப் புதுப்பித்து எழுதியவர்களுமாவோம். இதனை அன்புகூர்ந்து நமது அறக்காப்பாளர்கள் சிந்தையிற் கொள்ள வேண்டுகின்றனம்.

இன்றைய திருக்கோயில்களில் பெரும்பாலும் ஆதிசைவ மரபைச்சார்ந்த சிவாச்சாரியர்களே வழிபாடு செய்துவருகின்றனர். இவர்கள் வழிவழி, தூய தமிழினத்தினர். சிலர் காலப்போக்கில் தம் இனம் மறந்தது வருந்துதற்குரியதே. சிவாச்சாரியர்கள், பூசனை செய்தல் முறையேயாம். ஒரு துறையில் பலகாலும் பழகிய அனுபவம் அவர்களுக்கு இருக்கக்கூடும். ஆனாலும், அது தொழிற் சார்புடையதாக அமையவேண்டுமேதவிர, பிறப்புச் சார்புடையதாக அமைதல் நன்றன்று. திருக்கோயில்களில் நாள்தோறும் மூர்த்திகளோடு உறவு கொண்டு, மூர்த்தி சாந்நித்தியத்திற்குரிய நாள் வழிபாட்டை அந்தந்தத் திருக்கோயிற் குருக்கள்களே செய்யவேண்டும். ஆனால் மற்ற காலங்களில் அந்தந்தத் திருக்கோயில்களில் வழிபாட்டுரிமைபெற்றோர் - வழிபடுதற்குரிய தீட்சை முதலியனபெற்றோர் இறைவனுக்கு அண்மையிற் சென்று, அவனுக்கு மலர் இட்டு வழிபாடு

செய்துகொள்ளும் உரிமை இருத்தல் வேண்டும். எந்த ஒன்றும் தானே செய்தால்தான் அனுபவத்திற்குள் வரும். நம்முடைய திருக்கோயில் வரலாறுகளே கூட இங்ஙனம் பலர் பூசித்ததை எடுத்துக் கூறுகின்றன. இராமன், இராமேச்சுரத்தில் பூசித்திருக்கிறான். காஞ்சியில் வாலி பூசித்திருக்கிறான். ஏன்? எறும்பும் சிலந்தியும் கூடப் பூசித்திருக்கின்றன. அப்பரடிகள், ஐயாற்றுத் தேவாரத்தில் "போதொடு நீர் சுமந்தேத்திப் புகுவார் அவர்பின் புகுவேன்" என்று அருளிச் செய்துள்ளார். இன்றும் தமிழகத்திற்கு அப்பாலுள்ள எல்லா வடபுலத்துத் திருக்கோயில்களிலும் பக்தர்கள் வழிபட்டுக்கொள்ளும் வழிபாட்டுரிமை இருப்பது அறியத்தக்கது. இந்த வழிபாட்டுரிமை, எழுந்தருளும் திருமேனிக்கு அவசியமில்லை. முதன்மையாகவுள்ள மூலவர்க்கே போதுமானது. அதுவும், கால வழிபாட்டுக்குரிய நேரங்களல்லாது, குறிப்பிட்ட சிலமணி நேரங்கள் ஒதுக்குதல் வேண்டும். பக்தர்களை வழிபாட்டுக்கு அனுமதிக்கும் நேரத்தில் அர்ச்சகர் உடனிருந்து கண்டுகாட்டவேண்டும். அதுபோழ்து திருவாபரணங்கள் சார்த்தாமலும் இருக்கலாம். இதனை, நமது தமிழக அரசு கருத்திற்கொண்டு செயற்பட முன்வந்து பிறப்பு வேறுபாடின்றி, ஆர்வமுடையவர்க்கு அருச்சனைப் பயிற்சிதரத் திட்டமிட்டிருப்பது பாராட்டுதலுக்குரியது. தமிழக அரசின் இந்தக் கொள்கையினை – அதாவது அருச்சகர் பயற்சிப் பள்ளியைத் தொடங்கிப் பயிற்சிதரும் பொறுப்பை நிறைவேற்றும் வகையில் தெய்விகப்பேரவை, அருச்சகர் பயிற்சிக் கூடத்தை விரைவில் தொடங்க இருப்பதை மகிழ்வுடன் தெரிவித்துக்கொள்கின்றோம்.

திருக்கோயில் வழிபாட்டில் ஈடுபட்டுச் செய்யும் கடமையை ஏற்றுக்கொள்பவர்கள் முறையான வழிபாட்டில் தோய்வும் ஈடுபாடும் உடையவர்களாக

இருத்தல் வேண்டும். கண்ணிற்கும் கருத்திற்கும் வாராத பொருளை இப்படியன், இந்நிறத்தன், இவ் வண்ணத்தன் என்று எழுதிக் காட்டொணுத பொருளைக் கல்லிலும், செம்பிலும் எழுந்தருளச் செய்வது ஓர் அற்புதப் படைப்பாகும். இப்படைப்பாற்றலை மனிதன் பெறுதல் எளிதன்று. ஆற்றல்மிக்க அன்பால் அழைக்கும் ஆற்றல் வேண்டும். உள் நிறைந்த ஆற்றல் வேண்டும். உற்றுணர்ந்து ஒருமையுணர்வுடன் படைக்க வேண்டும். அவர்கள் சிறுமைத்தனங்களுக்கு அப்பாற்பட்டவர்களாக இருக்கவேண்டும். மகவெனப் பல்லுயிரையும் ஒக்கப் பார்க்கும் அருளுணர்வு வேண்டும். சாத்திர தோத்திரங் களில் தெளிந்த பயிற்சி இருத்தல் வேண்டும். வழிபாட்டில் ஊன் கரைய உளம்கரையக் கலந்து ஈடுபடுபவராக இருத்தல் வேண்டும். ஏன்? திருமுறைகள் கூறுவதைப்போலப் பழுத்தமனத்தடியாராக விளங்க வேண்டும். அவர்கள் வழிபாட்டைப் புண்ணியத்திற் சிறந்த திருத்தொண்டாகக் கருதவேண்டும். எந்தக் காரணத்தை முன்னிட்டும் அதைத் தொழிலாகக் கருதும் மனப்போக்கு கூடாது. எளிய தவ வாழ்க்கையை அவர்கள் ஏற்றுக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கிருர்கள். எளிமையல்லாத வாழ்க்கை, சீலத்திற்கும் தவத்திற்கும் பகையாகும். ஆதலால், தவத்தில் தோய்ந்த திருவுள்ள மும், சிவத்தில் தோய்ந்த சிந்தையும், பூசனையில் தோய்ந்த பொறிகளும், அருளில் தோய்ந்த புலன்களும் அவர்களுடைய வாழ்வியல் முறையாக அமைவது அவர்களுக்கும் பேறு; நமக்கும் பேறு ஆகும்.

சிவாச்சாரியார்கள் வழிபாட்டில் தோயவும், தோய்ந்து கலந்து அனுபவத்தைப் பெறவும் திருக் கோயில்களே வசதி செய்து கொடுத்தல் நல்லது. திருக்கோயிலின் கொடிமரத்துக்கு இப்பால் ‘சிவாச் சாரியார்கள் ஆன்மார்த்த பூசை செய்தற்குரிய இடம்

அமைத்துக் கொடுத்தலும் அதற்குரிய பொருள்கள் வழங்குதலும் அவசியமாகும். ஆன்மார்த்தபூசை செய்யாமல் பரார்த்த பூசைசெய்தல் முறையன்று. ஆன்மார்த்த பூசை செய்யாது பரார்த்தபூசை செய்வதைக் "கையிலிருக்கும் தேனை விட்டு முழங்கை வழியாக வழியும்தேனை நக்குவது போல" என்று அருணந்திசிவம் கூறியுள்ளார். அப்பரடிகளும் "உள்ளக்கிழியில் உருவெழுதி உயிராவணம் இருந்துற்று நோக்க"வேண்டும் என்றருளிச் செய்துள்ளார். இன்று பலர் ஆன்மார்த்த பூசைசெய்வதில்லை. அங்ஙனம் சிலர் செய்தாலும் செழுமையாகச் செய்வதில்லை. சிவாச்சாரியர்கள் வளமாக வாழமுடியாது போனாலும், வறுமையில் விழாமல் காப்பது திருக்கோயில்களின் கடமைகளில் ஒன்று. சிவாச்சாரியர்கள் வருகிற பக்தர்களிடம் நேரடியாகக் காசுகளை வாங்க அனுமதிப்பது நன்மரபாகாது. அங்ஙனம் காசுகளை வாங்கிக் கொள்ள அனுமதிப்பதன்மூலம் திருக்கோயில், சிவாச்சாரியர்களைப் பேணும் பொறுப்பிலிருந்து விலகிக்கொள்கிறது. அது, அவர்களுக்கும் நல்லதன்று; திருக்கோயிலுக்கும் நல்லதன்று; எந்த ஒன்றும் பழக்கத்தினால் கெடும் இயல்புடையது. கல்லேயானாலும் திரும்பத் திரும்பத் தண்ணீர் ஓடுமானால் தேயவே செய்யும். அதுபோல எவ்வளவுதான் நன்மனம்படைத்த சிவாச்சாரியராக இருந்தாலும் தமது வாழ்க்கைக்காகப் பக்தர்களிடம் காசுகள் வாங்கும் பழக்கம் ஏற்பட்டால், காசுகள் வழங்குபவரை எதிர்பார்த்துக் கொண்டிருப்பதும், வழங்குகிறவர்களிடத்துத் தனியொரு பரிவும், வழங்காதவரிடத்து ஈடுபாடின்மையும் போன்ற பலகுறைகள் இயல்பாகக் கால்கொள்ளும். அதைவிடப் பெரியதீங்கு சமய நெறிக்கு இருக்கமுடியாது. திருக்கோயிலும், திருக்கோயிலைச் சார்ந்த பணியாளர்களும், வழிபடுவோரும் ஒரு கூட்டுக் குடும்ப உணர்வுடையவர்களாக விளங்க வேண்டும்.

அங்கு ஒரு தொழிற்சாலை மனோபாவமோ, முதலாளி தொழிலாளி மனோபாவமோ கால்கொள்ளக் கூடாது.

சிவாச்சாரியர்களை அடுத்துத் திருக்கோயிலில் திருப்பதிகம் ஓதுவோர் இடம்பெறுகின்றனர். திருக்கோயில் திருப்பதிகம் ஓதுதல் ஒரு சடங்கன்று. அதுவும் திருக்கோயில் வழிபாட்டு முறையாகும். திருப்பதிகம் ஓதுதல் ஒருதுணை நிகழ்ச்சியன்று. முதன்மையான நிகழ்ச்சியே யென்பதைக்கவனத்தில் கொள்ளவேண்டும். இன்னமும் சில கோயில்களில் வழிபாடுகள் முடித்து ஆசீர்வாதம் சொன்னபிறகு, தேவாரம் பாடச்சொல்லு கிருர்கள். இது நெறியுமன்று; முறையுமன்று. எல்லாம் வல்ல இறைவனின் திருவருள், திருமுறைப் பாடல் களைக் கேட்டுமிக் கரைந்து கரைந்து கருணை பாலித்தது. திருப்பதிகம் ஓதுகிறவர்களும் சிவபூசையுடையவர்களாக இருத்தல் வேண்டும். எல்லாக் கோயில்களிலும் திருப் பதிகம் விண்ணப்பிக்கும் ஓதுவார்கள் இடம்பெறுதல் வேண்டும். பாடுவார் பசிதீர்க்கும் பரமனைப் பாடுபவர்கள் இளைக்காமல் பார்த்துக்கொள்ளவேண்டும். திருமுறை ஆசிரியர்களின் நலம் காப்பதில் திருக்கோயில்கள் அக்கறைகாட்டவேண்டும்.

நமது மரபுப்படி திருக்கோயில்களில் பூசனை செய் பவருக்கு எவ்வளவு தகுதியுண்டோ, அவ்வளவு தகுதி, திருக்கோயில்களில் திருவலகும், திருமெழுக்கும் இடுவோருக்குண்டு. அப்பரடிகள், இந்த நாட்டு மக்களைப் புலர்வதன்முன் திருக்கோயிலுக்கு வந்து திருவலகும் திருமெழுக்குமிடச் சொல்லிப் பணித்தார்கள். இன்று நம்முடைய சமயத்தைச் சார்ந்த எந்தத் தகுதி படைத்த மக்களிடத்திலும் இந்தத் திருத்தொண்டு செய்யும் வழக்கமில்லை. சமயச் சார்பில்லாத திருவைந் தெழுத்து உணராத–வளர்ச்சியடையாத சாதாரண

மக்கள் குறைந்த சம்பளத்திற்குப் பிழைப்புக் கருதி இதனைத் தொழிலாக மேற்கொண்டுள்ளனர். அவர்களுடைய வாழ்க்கைத்தரம் வேதனை தரத்தக்கதேயாம். அன்புகூர்ந்து அவர்களுடைய அகவாழ்க்கைத்திறனையும் புறவாழ்க்கை அமைப்பையும் வளர்த்துப் பேணிக்காக்க அறக்காப்பாளர்கள் மனம் கொள்ளும்படி கேட்டுக் கொள்கிறோம்.

திருக்கோயில்களில் பணிசெய்கின்றவர்களின் நல் வாழ்க்கைக்கு உத்தரவாதமளிப்பது திருக்கோயில்களின் கடமை என்பதை நாம் அடக்கத்துடன் உணர்த்தக் கடமைப்பட்டிருக்கிறோம். ஞாலமுழுதும் காப்பவனின் திருக்கோயிலில் பணி செய்பவர்களைத் துன்பத் தொடக் குடைய வாழ்க்கையில் ஈடுபடுத்துவது அவர்கள் சார்ந் திருக்கும் தத்துவத்திற்கே வினக் குறியாகும்.

திருக்கோயில்களைத் தூய்மையாகப் பாதுகாக்க வேண்டும். தூய்மையிலிருந்து தோன்றுவதே பத்திமை ஆதலால், திருக்கோயில் தூய்மையைப் பேணுவதில் அறக்காப்பாளர்கள் அதிககவனம் எடுத்துக்கொள்ள வேண்டும். திருக்கோயில் தூய்மைப்பொலிவும் திருவிளக்குக் காட்சியும், திருமேனிகளின் திருவருட் பொலிவும் பத்திமைநெறிவளர இன்றியமையாதன வாகும்.

திருக்கோயில் வழிபாட்டில் ஆரவாரம் குறைய வேண்டும். பூவும் நீரும் கொண்டு எம்பெருமானை வழி படுதலே ஆன்றோர் மரபு. தூபமும் தீபமும் காட்டுதல் தொன்மை மரபு இத்தகு வழிபாட்டு முறைகள் பெருகி வளர வேண்டும். எம்பெருமானுக்கு, பக்தர்களைக் கூட்டி வைத்துக் குடம் குடமாக—திருமுறைகளை ஓதி—நிறை நீராட்டுதல் பத்திமையை வளர்க்கத் துணைசெய்யும்.

மடைப்பள்ளிச் செலவுகளைக் கணிசமாகத் தவிர்க்கலாம். திருவிழாக்களைப் பொருளுடனும் பொலிவுடனும் நிகழ்த்துதல் வேண்டும். அப்போதும் ஆரவாரம் தவிர்ப்பது நல்லது. வேடிக்கைகளை ஒதுக்குவதும் நல்லது. பண்ணுென்றிப் பரமனைப் பாடுவாரைக் கொண்டு பாடச் செய்யலாம்.

வழிபாட்டுக்கு வரும் மக்கள் வழிபாட்டில் கலந்து மகிழத் திருமுறைத் தமிழால் அருச்சனைசெய்யவேண்டும் என்று மீண்டும் கேட்டுக்கொள்கிறோம். திருமுறைத் தமிழாலே அருச்சனை செய்தல் ஆன்றோர் மரபுமட்டுமன்று; ஆண்டவனே உவந்து ஏற்றுக்கொண்டதுமாகும் 'அர்ச்சனை பாட்டேயாகும்' என்பது சிவபெருமான்வாக்கு. இன்று நம்மிடையில் விளங்கும் திருக்கோயில்களை நமக்குக் காப்பாற்றித் தந்தது திருமுறைத் தமிழேயாகும். ஞாலமுய்ய நாமுய்ய நமது நன்னெறி உய்ய அவதரித்தவர்கள் நமது நாயன்மார்களும் ஆழ்வார்களும். அவர்களை இடமாகக் கொண்டு திருவருள் செய்த அற்புதங்கள் அளப்பில. அவர்கள் அருளிச்செய்த பாடல்களை உவந்து கேட்க எம்பெருமான் பரவை நாச்சியார் வாயிற்படிக்குத் தூதுசென்றான். பரந்தாமனே, பாம்பணையைச் சுற்றிச் சுமந்துகொண்டு கன்னித் தமிழ்மீதுள்ள ஈடுபாட்டால் கணிகண்ணன் பின்னே போனான். இத்தகைய அருளாளர்களைத் திருக்கோயில்கள் போற்றினால்தான் நம்முடைய நெறிவளரும். வைணவக் கோயில்களில் ஆழ்வார் திருவிழா நடத்துவதைப்போல நமது சிவன் கோயில்களிலும் திருவிழாவிற்கு முன்பு நால்வர்விழாவும் திருமுறைவிழாவும் எடுக்கவேண்டும். திருக்கோயில்களில் நாயன்மார்கள் ஆழ்வார்கள் சந்நிதியை எடுப்புடனும் தோற்றத்துடனும் அமைத்து, வழிபாட்டிற்கு வருவோர் முதலில் அங்கு வழிபாடு செய்துகொண்டு

பின், சந்நிதிகளுக்குச் செல்லும்படி பழக்கவேண்டும். எந்த நாட்டுமக்கள் ஞானிகளை அதிகமாக வழிபடுகிறார்களோ, அவர்கள் மேம்பாடடைகிறார்கள் என்பதை உலக வரலாறு மெய்ப்பிக்கிறது. இன்று உலக சமயங்களாக வளர்ந்திருக்கிற சமயங்கள், தமது ஆச்சாரியர்களைப் பின்பற்றி வழிபட்டதனாலேயே இந்த உச்சக்கட்ட நிலையை அடைந்திருக்கின்றன. நாமோ, நம்முடைய ஞானாசிரியன்மார்களைப் போற்றிக் கொண்டாடாமல் இருந்து வருகிறோம். இந்த நிலைமையை மாற்றி, எல்லாத் திருக்கோயில்களிலும் நம்முடைய சமய ஞானாசிரியன்மார்களையும் போற்றிப் புகழ்ந்து பரவக்கூடிய ஏற்பாடுகளைச் செய்யும்படி நமது அறக்காப்பாளர்களைக் கேட்டுக்கொள்கின்றோம். திருமுறைத் தமிழைத் திருக்கோயில்கள் புறக்கணிக்குமாயின் திருக்கோயில்களில் எம்பெருமான் திருவருட் பொலிவு விளக்கமுற அமைதல் அரிது. ஆதலால், எல்லாத் திருக்கோயில்களும் திருப்பதிகம் விண்ணப்பிக்கும் ஓதுவார்களைத் திருக்கோயில்கள் தோறும் நியமித்துக்கொள்ளவேண்டும் என்று பன்முறை விரும்பி வேண்டிக்கொள்கின்றோம். அன்பு கூர்ந்து இதை வற்புறுத்தலாகக் கருதாமல் தமிழகமரபு காக்கும் பணியாகக் கருதி நமது வேண்டுகோளை ஏற்றுச் செயற்படும்படிக் கேட்டுக்கொள்கிறோம்.

திருக்கோயில்கள், காலத்தை வென்றிருக்கும் கருவூலங்கள். இன்று நம்மிடையில் நிலவும் திருக்கோயில்களைப்போலப் புதியதொரு கோயிலை எழுப்ப நமக்கு ஆற்றலிருக்கிறதா என்பது ஐயத்திற்கிடமே. ஆதலால், இத்திருக்கோயில்களைப்பேணிப் பாதுகாப்பதில் நாம் மிகவும் அக்கறை காட்டவேண்டும். தென்காசித் திருக்கோயிலை எடுத்த பராக்கிரம பாண்டியன் கோயிலை எடுத்து முடித்தபிறகு,

" ஆரா யினுமிந்தத் தென்காசி மேவும்பொன் ஞலயத்து
வாராத தோர்குற்றம் வந்தாலப் போதங்கு வந்ததனே
நேராக வேயொழித் துப்புரப் பார்களை நீதியுடன்
பாரா ரறியப் பணிந்தேன் பராக்கிரம பாண்டியனே."
"சேலே றியவயற் றென்காசி யாலயந் தெய்வச்செய
லாலே சமைந்ததிங் கென்செய லல்ல வதனையின்ன
மேலே விரிவுசெய் தேபுரப் பாரடி வீழ்ந்தவர் தம்
பாலேவல் செய்து பணிவன் பராக்கிரம பாண்டியனே."

என்று எழுதி வைத்திருக்கிருன். ஏழாம் நூற்ருண்டில் தமிழகத்தின் எழு ஞாயிருக, ஞானக் கதிரவனுக, புரட்சி பூத்த புதுமலராக உலாப்போந்த அப்பரடிகளும் திருக் கோயிலைக் காக்கும் திருத்தொண்டை உழவாரத் தொண்டு செய்வதன்மூலம் ஏற்றுக்கொண்டார். ஆதலால், நமது திருக்கோயில்களின் கோபுரங்களிலும் மதில்களிலும் செடி கொடிகள் முளைக்காமல் பாதுகாக்க வேண்டும். அப்படியே முளைத்தாலும் உடனுக்குடன் செடி கொடிகளை வேருடன் வெட்டி அப்புறப்படுத்திப் பாதுகாத்து வரவேண்டும். செடிகொடிகளை வெட்டும் பொழுது வேரோடு வெட்டாமல் கொப்புகளைமட்டும் வெட்டுதல் கூடாது. அப்படி வெட்டினுல் செடிகொடிகள் மறையா. கொப்புகளில் பரவவேண்டிய உயிர்ப்பாற்றல் வெளியே வளர வாய்ப்பின்மையின் காரணமாக வேரிலேயே தங்கி வேரினை உருத்துப் பருத்து வளரச் செய்யும். அதனுல், கோயிலுக்குப் பெருஞ் சேதம் உண்டாக்கும். அதாவது புலன்களில் தூய்மையின்றிப் பொறிகளில்மட்டும் தூய்மை காட்டுவோர் வாழ்வு கெடுதலைப் போலவாம். ஆதலால், செடி கொடிகளை வேருடன் வெட்டியகற்றித் தோண்டிய இடங்களையும் உடன் சீர்செய்து செப்பம் செய்யவேண்டும். ஒரே

வழித் தேவையானல் மரங்கொல்லி மருந்தையும் பயன்படுத்தலாம். இங்ஙனம் செடிகொடிகள் முளேக்காமல் இருப்பதற்குரிய வழிவகைகளேயும் கண்டு முற்காப்பு நடவடிக்கை எடுக்கவேண்டும். அதாவது தளங்களிலும் சுவர்களிலும் சந்துபொந்துகள் இல்லாமல் அவ்வப்பொழுது சீர்செய்துகொள்ளவேண்டும். அஃதோடு திருக்கோயில் மேல் தளங்களேயும், திருமதில்களேயும் திருக்கோபுரங்களேயும் நீண்ட கம்புகளில் கட்டிய திருவலகுகள் கொண்டு கவனத்துடன் கூட்டித் தூய்மை செய்யவேண்டும். தளங்களில் விழும் தண்ணீர் உடனுக்குடன் கீழே போகும்வண்ணம் சாளரங்கள் அமைத்து அடைபடாவண்ணம் பார்த்துக் கொள்ளவேண்டும். இந்த வேலேகளேத் தொடர்ந்து கவனமாகச்செய்யத் திருக்கோயில்களில் உழவாரப் பணிக்கென்றே ஒரு முழுநேரப் பணியாளர் அல்லது சமய ஆர்வமுள்ள தொண்டுமனம் படைத்த தொண்டர்களே வைத்துக் கொள்வது அவசியம்.

பழங்காலத்தில் சமயத்தைச்சார்ந்த பேரரசுகள் இருந்தன. அடுத்துப் பெரிய நிலப் பிரபுக்கள் இருந்தார்கள். அடுத்துச் செல்வந்தர்கள் தோன்றித் திருப்பணிகளேச் செய்துவந்தனர். இன்றைய சமுதாயப் போக்கில் இனி இந்த வாய்ப்புக்கள் அரிதாகிவிடும். ஆதலால் நாம் திருக்கோயில்களேப் பேணிக்காப்பதில் பெரிதும் அக்கறை காட்டவேண்டும்.

நமது சமய இயக்கம், இன்று ஒழுங்குபடுத்தப் பெற்றதாக இல்லே. நம்முடைய திருக்கோயில்களுக்கும் நமது மக்களுக்கும், நம்முடைய திருமடங்களுக்கும் நமது மக்களுக்கும் இன்று ஆக்கபூர்வமான உறவில்லே,

இந்த நிலைமையை மாற்றி, நமது திருக்கோயில்களுக்கும் மக்களுக்கும் நமது திருமடங்களுக்கும் மக்களுக்கும் நெருங்கிய உறவினை உருவாக்கி வளர்க்க வேண்டும். ஆதலால் ஒவ்வொரு திருக்கோயிலும் அந்தந்தக் கோயில் வட்டத்திலுள்ள மக்களை உறுப்பினர்களாகக் கொண்ட தெய்விகப் பேரவை அமைத்துத் திருக்கோயில் களைக் குடிமக்கள் சூழ்ந்து குலாவும் திருக்கோயில்களாக விளங்கும்படி செய்யவேண்டும். திருக்கோயில்கள்—திருமடங்கள் சொத்துப் பதிவேடுகள் மட்டும் வைத்துக் கொண்டு, தம்மைச் சார்ந்த மக்களின் கணக்கை வைத்துக்கொள்ளாதது வேதனைக்குரிய செய்தி! நம் முடைய சமயத்திற் பிறந்து ஒழுகும் வாய்ப்புப்பெற்ற அனைவரும் திருமூலர் கண்டு காட்டிய ஒரு குலத்தைச் சேர்ந்தவர்கள். நாம் வணங்கும் கடவுள் ஒரு குலத்துக்கு ஒரு தேவன் என்று திருமூலர் கண்டு காட்டிய தனக் குவமையில்லாத் தலைவன். ஆதலால், நமது திருக் கோயில்கள்—திருமடங்கள் தம்மைச்சார்ந்த மக்களின் நலம் பேணுதற்குரிய பணிகளில் ஈடுபட வேண்டும். மதமாற்றங்களையும், நாத்திக வாதத்தையும் அப்பொழுது தான் நாம் ஈடுகொடுக்க முடியும். இன்றைச் சூழ்நிலையில் திருக்கோயில்களும் திருமடங்களும் ஒருங்கிணைந்து செயல் படுதற்குரிய தெய்வீகப் பேரவை தோன்றி யிருப்பது நம்முடைய பேறேயாகும்.

திருமடங்களின் வரலாற்றில் அவர்கள் ஓரணியில் சேர்ந்தது. இந்த நூற்றாண்டின் புதுமைமிக்க சாதனை என்பதை நீங்கள் அறிந்திருப்பீர்களென்றே நம்பு கின்றோம். தமிழகத்தைச் சார்ந்த பதினாறு திருமடங் களின் தலைவர்களை உறுப்பினர்களாகக் கொண்ட பேரவை தொடங்கப் பெற்றிருக்கிறது. தெய்விகப் பேர வையின் முதல்தலைவராகத் தருமபுரம் ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ

மகாசந்நிதானம் அவர்கள் இருந்தருளிப் பேரவையை வாழ்த்தி வலிமைப் படுத்தியுள்ளார்கள். திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானம் அவர்களும், காஞ்சி காமகோடிபீடம் ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் அவர்கள், திருப்பனந்தாள் ஸ்ரீ காசிவாசி சுவாமிகள் அவர்களும் பேரவையின் மற்ற திருமடங்களின் தலைவர்களும் பேரவையில் பங்குபெற்றுப் பேரவையை வளர்த்துவருகிறார்கள். நமது இந்து அறநிலையத்துறை ஆணையர் அவர்கள் பேரவையின் துணைத் தலைவராக இருந்து முறையாகச் செயற்படுத்தி வருகிறார்கள். பேரவையின் தோற்றமும் அமைப்பும் தமிழக சமய வரலாற்றில் ஒரு பொற்காலம் என்றே அறிஞர்கள் கருதுகிறார்கள். இடைக்காலத்தில் நம்முடைய நல்லூழின்மையின் காரணமாக நம்முடைய திருமடங்களின் தலைவர்களுக்கும் நமக்கும் நெருங்கியஉறவுகள் இல்லாமற் போயிற்று. அந்தக் குறைநீங்கி, அவர்கள் நம்மிடையில் வரவும், நம்மோடு உடன்நின்று பணிகளை ஏற்றுச் செய்யவும் முன்வந்திருப்பது நமது பேறேயாகும். இந்த வாய்ப்பினை நாம் அனைவரும் நன்றாகப் பயன்படுத்தி நமது சமய நெறிக்கும் நமது சமுதாயத்திற்கும் நல்ல பல பணிகளைத் திட்டமிட்டுச் செய்யவேண்டும். இன்றையச் சூழ்நிலையில் தெய்விகப் பேரவையின் முன்னால் இருக்கும் கடமைகள் பலப்பல. இறைவனின் திருவருளை நம்பியும் தமிழகத் திருமடங்களின் தலைவர்கள் வாழ்த்துடனும், உங்களனைவருடைய பூரண ஒத்துழைப்புடன் தெய்விகப் பேரவையின் எளிய தொண்டராகத் தொண்டு செய்யும் வாய்ப்பு நமக்குக் கிடைத்திருக்கிறது. இந்த வாய்ப்பை உளம்நிறைந்த மகிழ்ச்சியுடன் வரவேற்று உங்கள் அனைவருக்கும் நன்றிகூறிக் கொள்கிறோம்.

நமது சமயநெறியைச் சேர்ந்த குழந்தைகள் முறையாகப் பயில நமது சமய-சமூக நாகரீக அடிப்படையில்

தங்கிப்படிக்கும் கல்விக்கூடம் ஒன்று ஆரம்பப் பாடசாலை யிலிருந்து கல்லூரிவரை அமைய வேண்டும் என்பது நமது விருப்பம். பலரும் இத்தகைய ஓர் அமைப்பை வேணவாவுடன் விரும்புகின்றார்கள். இந்தக் கல்விக் கூடமே ஒரு பல்கலைக் கழகம் அளவுக்கு வளர்ச்சியடை யத் தக்கதாக அமையவேண்டும் என்பது திட்டம். இந் திய நாடு விடுதலைபெற்று இருபது ஆண்டுகளுக்கு மேலாகியும் இன்னும் நமது தாய் தமிழகத்தில் தமிழ்ப் பல்கலைக் கழகம் தோன்றாதது ஒரு பெரிய குறையே ஆதலால், தமிழ்ப் பல்கலைக் கழகத்தை நாம் உடனடி யாகக் காணவேண்டும்.

தமிழ் ஒரு வளர்ந்தமொழி; துறைதோறும் வளர்ந்த மொழி. நாம் அமைக்கும் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் வரலாறு, இலக்கியம், தத்துவம், மருத்துவம் (சித்த வைத்தியம்), பொறியியல் ஆகிய அனைத்துத் துறை களும் பழைய தமிழ் மரபுகளுடன், வளர்ந்துவரும் புதிய மரபுகளோடு இணைத்துக் கற்பிக்கப்பெறும். தமிழையே உயிர்மூச்சாகக்கொண்ட தமிழக அரசின் பொற் காலத்தில் இத்தமிழ்ப் பல்கலைக்கழகத்தைக் காண்பது நமக்கு எளிதில் கூடிய ஒன்று. இந்தத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தை, இந்த நாட்டின் சமய வரலாற்றுக்கு, ஊனும் உயிர்ப்புமாக விளங்கும் அப்பரடிகளைத்தந்த திருவதிகை யில் அமைக்கத் திட்டமிட்டு முயற்சி எடுக்கப்பெற்றுள் ளது. அதற்கு எண்பதுஏக்கர் நிலம் ஒப்படைப்புச்செய்து தரும்படி, அரசிடம் கோரி விண்ணப்பிக்கப்பெற்று நடவடிக்கையிலிருந்து வருகிறது. பல்கலைக்கழகத்திற்கும் முறையாகத் தொடர்புகொள்ளப்பெற்றிருக்கிறது. நம் முடைய மொழிவரலாற்றுக்கும், இனவரலாற்றுக்கும் சமயவரலாற்றுக்கும் எழுச்சியும் ஏற்றமும்தந்து அரண் செய்யக்கூடிய இந்தப் பல்கலைக்கழகத் தோற்றத்திற்கு

உங்கள் அனைவருடைய இனிய ஒத்துழைப்புகள் கிடைக்குமென்று நம்புகின்றோம்.

இன்று, நமது சமயநெறியை மக்களிடத்தில் கொண்டுசெல்லவும், நமது மக்களின் நலன் கருதி நல்லன சொல்லவும், அவர்களுக்கு உற்றுழி உதவி செய்யவும் நம்மிடையில் போதிய சேவா மனப்பான்மை யுள்ள தொண்டர்கள் இல்லை. நம்மிடையில் சமயப் பிரச்சாரமும்கூட ஒரு தொழிலாக வளர்ந்துவிட்டது. உலகின் பல்வேறு பகுதிகளிலும்நமது சமய நெறியைச் சார்ந்த மக்கள் வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள். ஆனால், அவர்களுக்கும் நமக்கும் உறவில்லாமல் இருக்கிறது. இந்த நிலைமையை மாற்ற, அவர்களுக்கிடையே நாம் நமது தொண்டர்களை அனுப்பித் தொண்டுசெய்ய வேண்டியதிருக்கிறது. ஆதலால், இன்றைய நமது உடனடியான தேவை சேவா மனப்பான்மையுடைய முழுநேரத் தொண்டர்கள் இதனை உணர்ந்த நமது அறநிலைய அமைச்சர் மாண்புமிகு கே. வி. சுப்பையா அவர்கள், அவர்கள் இந்தத்துறையில் பொறுப்பேற்ற வுடனேயே இதனைச் செய்யவேண்டுமென்று நம்மிடம் எடுத்துக்கூறி வற்புறுத்தினார்கள். நமது அமரர் அறிஞர் அண்ணா அவர்களும் தாம் படைத்த எழுத்தோவியங் களில் குறிப்பாகப் "பார்வதி பி. ஏ.,"யில் வலியுறுத்தி யிருக்கிறார்கள். நமது பரிவுக்கும் பாராட்டுதலுக்குமுரிய முதல்வர் கலைஞர் அவர்களும், நம்முடைய சமய அமைப்புகள் சேவா அமைப்புக்களாக விளங்கவேண்டு மென்ற நோக்கமுடையவர்களேயாம். ஆதலால், நாம் விரிந்த அடிப்படையில் இதற்குத் திட்டமிட்டு நமது சமயப்பணிக்குச் சமயத்தந்தைமார்களைத் தயார்செய்யும் பயிற்சிக்கல்லூரியைத் தொடங்கிச் செயற்படவேண்டிய திருக்கிறது. இந்தப் பொறுப்புள்ள வரலாற்றுச் சிறப்

புடைய பணியை தெய்விகப்பேரவை நேரடியாக அல்லது தன்னுடைய கண்காணிப்புக்கு உட்பட்ட ஒரு துணை அமைப்பின் மூலமாக மேற்கொள்ளத் திட்டமிட்டிருக்கிறது. இந்த இனிய ஒப்பற்ற பணிக்கு நன்மனம் படைத்த உங்களுடைய வாழ்த்து முதலில் வேண்டும். இயலுமாயின், இல்லை ஒன்றுக்கும் மேலாகப் புதல்வர்ப் பேறு பெற்றவர்கள் தங்களுடைய அருமந்தப் புதல்வர்களில் ஒருவரை இந்தப் பேரியக்கத்திற்குத் தந்து உதவுவதோடு, தங்களைச் சார்ந்தவர்களையும் தரும்படி தூண்டி வழிநடத்தும்படி கேட்டுக்கொள்கிறோம். இந்த ஒப்பற்ற பணிக்குத்தக்க நிதியை, நம்முடைய அற நிலையங்களிலிருந்தும் பொதுமக்களிடமிருந்தும் பெற உங்களுடைய இனிய ஆக்கபூர்வமான ஒத்துழைப்பு கிடைக்குமென்றே நம்புகின்றோம்.

இரண்டாவது உலகத் தமிழ் மாநாட்டின் பொழுது அறிஞர் பெருமக்களின் சிலைவைப்பது தொடர்பாக அறிஞர் அண்ணா அவர்களுடன் நாம்பேசும் வாய்ப்புக் கிடைத்தது. அதுபோழ்து நமது அருமை முதல்வர் கலைஞர் அவர்களும் உடனிருந்தார்கள். அப்பரடிகளைப் பற்றிப் பேச்சுத் தொடங்கியவுடன் அறிஞர் அண்ணா அவர்கள், அப்பரடிகள் அருளிச்செய்த "நாமார்க்கும் குடியல்லோம்" என்றபாடலையும், "சாத்திரம் பல பேசும் சழக்கர்காள்" என்றபாடலையும் அவர்களே கூறினார்கள். அப்பரடிகளுக்கு ஒரு நல்ல நினைவு மண்டபம் சென்னையில் நிறுவலாம் என்று ஆலோசனை கூறி ஆதரவு தருவதாக வாக்களித்தார்கள். அப்பரடிகள் நினைவு மண்டபம் கட்டத் தெய்விகப் பேரவை திட்டமிட்டிருக்கிறது. அந்த மண்டபம், தமிழகக் கலைகளைப் பிரதிபலிக்கும் படியாக அமையும் ஆங்கு ஒரு திருக்கோயிற் பொருட் காட்சியும் பிறவும்

அமையும். இதற்குரிய இடம் பெறும் முயற்சியில் பெறும்பாலும் வெற்றி பெற்றிருக்கிறோம். அந்த மண்டபம் அமைக்கும் முயற்சியிலும் நமது அறக் காப்பாளர்களின் பூரண ஆதரவை விரும்பி வேண்டிக் கேட்டுக் கொள்கிறோம். இங்கு நாம் குறிப்பிட்டிருப்பவை தெய்வீகப் பேரவை திட்டமிட்டிருக்கும் பணிகளிற் சிலவேயாம். இன்னும் அதனுடைய பணிகள் பலமாக உள்ளன. இங்குக்குழுமி இருக்கின்ற அறக்காப்பாளர்கள் தெய்வீகப் பேரவையின் பணியைச் சிந்தித்து வைத்தால் ஏற்றுச்செயல்பட முன்வரும். ஆதலால், உங்கள் அனை வருடைய இனியவாழ்த்துக்களை—இனிய ஒத்துழைப்புகளை விரும்பிவேண்டிக் கொள்கிறோம். திருக்கோயில் அறங் காப்பாளர்கள் ஆலயங்களைப் பேணும் தொண்டிலும், தெய்விகப் பேரவையைச் சேர்ந்த உறுப்பினர்கள் — திருமடங்களின் தலைவர்கள் நம்முடைய சமுதாயத்தின் அகநலங்களையும், புறநலங்களை யும் பேணிக் காக்கும் தொண்டிலும் ஈடுபட்டு திருக் கோயில்களுக்கு இந்தச்சமுதாயத்தை அரணாக விளங்கச் செய்வது வரவேற்கத்தக்கது. ஆதலால், திருக்கோயில் அறக்காப்பாளர்கள், தெய்விகப் பேரவையை வலிமைப் படுத்துவது அவசியமாகும். தெய்விகப் பேரவையின் உறுப்பினர்கள் நாடுமுழுதும் தழுவிய திருத்தொண்டு களைச் செய்து, நமது சமய மரபுகளுக்கும், சமய நிறுவனங்களுக்கும் சமயவழிப்பட்ட சமுதாயத்திற்கும் அரண்செய்ய வேண்டும். அந்தத் திருத்தொண்டினைத் தொடர்ந்து பாதுகாக்கச் சிறந்த தொண்டர்களை—சமயத் தந்தை மார்களைப் பயிற்றுவித்து நாடுமுழுதும் பரவிக் கிடக்கும் கோயில்கள் முழுதும் அமர்த்தி, மகேசன் தொண்டும், மக்கள் தொண்டும் நிகழ்த்துதல் வேண்டும். இதுவரையில் நமது சமயநெறியும் பிரச்சாரமும் சமுதாயத்தின் மேல்மட்டத்தில் உள்ளவர்களையே

அணைந்து வந்திருக்கின்றன. அருமையாக நடுத்தர வர்க்கத்தினரிடமும் சென்று சேர்ந்திருக்கின்றன. நம்முடைய சமயத்தைச் சார்ந்த — சமூக மக்களில் அடித்தளத்தில் இருப்பவர்கள் புறநலமும் அகநலமும் பெறமுடியாமல் வாழ்க்கைப் போராட்டத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள். அவர்களைச் சமயம் இன்னும் அணுகவில்லை. ஆனால், அவர்களிடத்தில் நம்பிக்கையின் பாற்பட்ட இனந்தெரியாத சமயப்பிடிப்பு இருந்து வருகிறது. ஆயினும், அந்தமட்டத்தில்தான் ஊடுருவல்கள் நிகழ்கின்றன என்பதை எடுத்துக்கூற வேண்டிய அவசியமில்லை. அவர்களுக்குத் தொண்டுசெய்து, அவர்களை வாழவைத்தல் காலத்துக்குத் தேவையான பணியாகும். அதுமட்டுமன்று வழிவழிவந்த தொண்டு மரபுமாம். பன்றிக்குட்டியின் பசி நீக்கப் பரமனே தாய்ப்பன்றியாக வடிவம்கொண்டு எழுந்தருளிய வரலாறும், அழுத பிள்ளைக்கு அன்னை பராசக்தியே பாலூட்டிய வரலாறும், பரமனிடம் படிக்காசு பெற்றுப் பஞ்சம் நீக்கிய வரலாறும், திருக்கச்சூரில் சுந்தரரின் பசி நீக்க இறைவன், இல்லங்கள் தோறும் எழுந்தருளி இரந்து சோறுகேட்ட வரலாறும் இந்தத் தொண்டு நெறியை வற்புறுத்தவில்லையா? "இரப்பவர்க்கு ஈயவைத்தார், ஈபவர்க்கருளும் வைத்தார்" என்ற அப்பரடிகள் வாக்கும், "நடமாடும் கோயில் நம்பர்க்கு ஒன்று ஈயிற் படமாடும் கோயிற் பரமற்கங்காமே" என்ற திருமந்திரத்தின் ஆணையும், "ஐயமும் பிச்சையும் ஆந்துணையும் கைகாட்டி" என்ற ஆண்டாள் திருவாக்கும் நாம் நினைவிற் கொள்ளத்தக்கன. நமது திருக்கோயில்கள் பழங்காலத்திலேயே சமூகத்தின் மையமாக — சமூகத்தின் தேவைகளை நிறைவு செய்யக் கூடியனவாக முழுமையுற அமைந்திருந்தன என்பதை இங்கு நாம் எடுத்துக் கூற வேண்டிய அவசியமில்லை என்றே கருதுகிறோம்.

நம்முடைய திருக்கோயில்களில் கல்விக்கூடங்கள் இருந்திருக்கின்றன. திருவொற்றியூரில் இலக்கணம் கற்றுக்கொடுக்கும் பள்ளி இருந்ததாகக் கல்வெட்டு கூறுகிறது. வடஆர்க்காடு மாவட்டம் திருவாமாத்தூர்த் திருக்கோயிலில் பதினறு குருடர்களுக்குத் திருமுறை கற்பிக்கப்பெற்றது என்று கல்வெட்டு கூறுகிறது. தஞ்சைப் பெருவுடையார் திருக்கோயிலில் நாடக அரங்கு இருந்ததாகவும் திருவிழாக் காலத்தில் நாடகங்கள் நடத்தப்பெற்றன என்றும் கல்வெட்டால் அறிய முடிகிறது. திருவெண்ணெய்நல்லூர்த் திருக்கோயிலில் ஊர்ப்பஞ்சாயத்துச் சபை இருந்ததாகவும், அப்பஞ்சாயத்து சபைக்கு உள்ளூர் வழக்குகளை விசாரித்து முறைவழங்கும் உரிமையிருந்ததாகவும் பெரிய புராணத்தின்மூலம் தெரிய வருகிறது. சுந்தரருக்கும் சிவபெருமானுக்கும் ஏற்பட்ட வழக்கு திருவெண்ணெய்நல்லூர்த் திருக்கோயிலிலிருந்த ஊர்ச் சபை முன்னே வந்ததைச் சுந்தரர் வரலாற்றின்மூலம் அறியமுடிகிறது. நமது திருக்கோயில்கள் உயிர்ப்பிணி தீர்க்கும் திருவருள் வைப்புக்களாக மட்டுமல்லாமல் உடற்பிணிதீர்க்கும் மருந்தகங்களையும் தன்னகத்தே கொண்டுவிளங்கின. உயிர், திருவருட் குறிப்பின் வழி உடுத்துக்கொண்ட உடைதானே இந்தஉடல். இந்த உடலினைக் கருவியாகக் கொண்டுதானே, உயிர் உய்தி பெறுகிறது! ஆதலால், உயிர் உய்தி பெறுதற்கு இந்த உடற்கருவி இன்றியமையாதது மட்டுமன்று; அது நலமுடையதாகவும் இருக்கவேண்டும். நம்முடைய சமயத்தில் யாக்கையை இழிவாகப் பழித்தல் பெருவழக்கில்லை. அதற்குமாருகப்போற்றச் சொல்லியிருக்கிருர்கள். "வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி, மதித்திடுமின்" என்று திருமுறை பேசும். தமிழ்மறை தந்த திருமூலர்,

"உடம்பார் அழியில் உயிரார் அருவர்
திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே."

என்று அருளிச்செய்துள்ளார். தஞ்சையில் இராசராசன் நினைவாகக் குந்தவையாரால் இலவச மருத்துவச்சாலை ஒன்று கண்டு நடத்தப்பெற்று வந்தது. விக்கிரம சோழனின் ஆட்சிக்காலத்தில் திருவாவடு துறையில் ஒரு மருத்துவக் கல்லூரியே இருந்ததாகக் கல்வெட்டுக் கூறுகிறது. முந்நூற்று அறுபத்து நான்கு மாணவர்கள் உணவுமுதலியன பெற்று இந்த மருத்துவக் கல்லூரியில் பயின்று வந்திருக்கின்றனர். காஞ்சிபுரம் மாவட்டம் திருமுக்கூடலிலும் ஒருமருத்துவக் கல்லூரி இருந்திருக்கிறது. இந்த மருத்துவக் கல்லூரி கோயிலாலேயே நிர்வகிக்கப்பட்டு வந்திருக்கிறது. இங்கிருந்த மருத்துவச் சாலையில் ஓராண்டுக்குரியனவாக மருந்துகள் இருந்ததாக தெரிகிறது. இங்கு ஒருமருத்துவரும், ஒரு சல்லியக்கிரியை செய்வாரும் (அறுவை சிகிச்சை மருத்துவர் *Surgeon*) அவருக்குத் துணையாக மருத்துவப் பணிமகளிர் பலரும் இருந்தனர் என்று தெரிய வருகிறது.

இங்ஙனம், நமது திருக்கோயில்கள் சமூக நலப்பணி மனையாக விளங்கிவந்திருக்கின்றன. காலப் போக்கில் பொருந்தாச் சாதிவெறியுடையோர் — வேட்கையுடையோர் கையில் இத்திருக்கோயில்கள் சிக்கினமையின் காரணமாகத் திருக்கோயில்கள் சமூக இருதயமாக விளங்கிய பேற்றை இழந்துவிட்டன. திருக்கோயில்களை விட்டுச் சமுதாயமும் விலகிச் சென்று விட்டது. மீண்டும், நம்முடைய அறக்காப்பாளர்கள், நம்முடைய திருக்கோயில்களை மூவேந்தர் வகுத்துக் கொடுத்த முறைப்படி, சமூகத்தின் மையமாக விளங்கச்செய்வார்கள் என்று உளமார நம்புகின்றோம். இந்த வகையில் அமரர்

அறிஞர் அண்ணு எழுதியும் பேசியும் காட்டிய படிப்பினை ஒன்றல்ல, இரண்டல்ல. நமது செயல் நலம் சிறந்த முதல்வர், மாண்புமிகு கலைஞர் அவர்களுக்கும், நமது அமைச்சர் மாண்புமிகு கே. வி. சுப்பையா அவர்களுக்கும் இத்தகைய பேரார்வம் இருப்பது நம்முடைய தலைமுறையின் நற்காலமாகும். இந்தத் தருணத்தை ஒருபொழுதும் வீணுக்காமல் நாம் திருப்பணிகளைச் செய்திட வேண்டும்.

இதனை நமது தெய்விகப் பேரவை உறுப்பினர்கள், அறக்காப்பாளர்களாகிய உங்களுடைய உளம் நிறைந்த ஒத்துழைப்புடன் செய்யவேண்டும். அந்தவகையில் உங்களுடைய கவனமும் ஈடுபாடும் ஆர்வமும் அக்கறையும் இருக்குமென்ற நம்பிக்கை நமக்கு உண்டு. தெய்விகப் பேரவையின் சார்பில் மாநிலஅளவில் செயல் படக்கூடிய அருச்சகர் பயிற்சிப் பள்ளியும், திருமுறை ஆசிரியர் பயிற்சிப் பள்ளியும், சமயத் தந்தைமார் பயிற்சிக் கல்லூரியும் தொடங்கி திருக்கோயில் அறக்காப்பாளர்கள் ஒத்துழைப் புடன் நடத்தப் பெறவேண்டும். நமது திருக்கோயில்களை யொட்டி வசதிக்கும் வாய்ப்புக்கும் ஏற்றவகையில் கோயில் நிர்வாகத்திலேயே பள்ளிகளும், கல்லூரிகளும், நல்ல நூலகங்களும் அமையவேண்டும். நூலகங்களைச் சார்ந்து சிந்தனை வட்டங்கள் அமையவேண்டும். "நாஞர்? என்னுள்ளமார்? ஞானங்களார்?" என்ற வினக்களுக்கு விடைகாணுமளவுக்குத் திருக்கோயிலைச் சார்ந்திருக்கும் சிந்தனை வட்டங்கள் துணைசெய்யவேண்டும். மேலும் திருக்கோயிலைச் சார்ந்து மருந்தகங்களும் அமைய வேண்டும். தமிழக அரசு, திருக்கோயிலைச் சார்ந்து சித்தவைத்திய நிலையங்கள் அமைக்கவேண்டும் என்று முடிவு செய்துள்ளது. அதுவரவேற்கத் தக்க முடிவு. நாம் அனைவரும் அதனைச் செயற்படுத்தமுயலவேண்டும்.

இந்த நேரத்தில் நம்முடைய வேண்டுகோள் ஒன்று, தமிழக அரசுக்கு உண்டு. இந்தத் தலைமுறையினர், திருக்கோயில்களின் நிதியில் வழிபாட்டுக்கும் திருக்கோயில் பேணுதலுக்கும் செலவானதுபோக எஞ்சும் நிதியை, அந்தச் சமயத்தைச் சார்ந்த மக்களின் நலனுக்குச் செலவிடுவதில் யாதொரு தடையும் கூறமாட்டார்கள் என்று உறுதியாக நம்புகின்றோம். அங்ஙனம் யாரவது ஓரிருவர் கூறினாலும், அதுநெறியின் நீங்கியோர் கூற்றேயாம். அதனைப் பொருட்படுத்த வேண்டிய அவசியமில்லை. திருக்கோயில் நிதியை மக்களுக்குப் பயன்படும் வகையில் செலவழிக்கத் தமிழக அரசு திட்டமிடுவதை நாம் உளமார வரவேற்கின்றோம். அதன்தொடர்பாகத் தமிழக அரசின் கவனத்திற்கு, நம்முடைய மாண்புமிகு அறநிலைய அமைச்சர் அவர்களின் மேலான கவனத்திற்கு நாம் ஒருசெய்தியினைக் கொண்டுவரக் கடமைப் பட்டிருக்கிறோம்.

திருக்கோயில் உபரி நிதியை அந்தந்தத் திருக்கோயிலைச் சார்ந்தோ, இன்னொரு திருக்கோயிலைச் சார்ந்தோ மக்கட் பணிசெய்ய வேண்டு மென்பதேயாகும். திருக்கோயில் உபரிநிதியை அரசுத்துறை நிறுவனங்களுக்கோ பிறதுறை நிறுவனங்களுக்கோ, பயன்படுத்துவதைத் தவிர்ப்பதும் நல்லது.'' இது நம்முடைய வேண்டுகோளும் கூட.

ஒவ்வொரு திருக்கோயிலும் கலைவளர்கூடமாக திருவருள் நலம் கொழிக்கும் பண்ணைகளாக எம்பெருமான் எழுந்தருளும் திருத்தலமாக உயிர்கள் பற்றிப்படர்ந்து செழித்துவளரும் கொழுகொம்புகளாக இடர்நீக்கி இன்பந் தருவதாக விளங்கத் தமிழகத் திருமடங்களின் தலைவர்களும், அறக்காப்பாளர்களும்

ஒல்லும்வகையால் ஓவாதே பணிசெய்ய வேண்டும் என்று விரும்பிக் கேட்டுக்கொள்கின்றோம்.

சண்டீசர் எழுதும் திருமுகத்தில் "அறம் செய்தானே செய்தான், அறங்காப்பான் திருவடிகள் அறம் செய் தானின் சிரசின்மேற்கொண்டு" என்று போற்றிடும் அறக்காப்பாளர் பணியில் ஆர்வத்துடன் ஈடுபட்டிருக்கும் சான்றோராகிய உங்கள் அனைவர்க்கும் நமது வாழ்த் துக்கள்! உங்களுக்குத் தெரிந்த செய்திகளைத்தான் நினைவுபடுத்துகிறோம் என்ற அடக்கமான உணர்வுடன் சில பல செய்திகளை எடுத்துக் கூறினோம். அவற்றில் ஏற்றுக்கொள்வனவற்றை ஏற்றுச் செயற்படுத்தி நம்முடைய சமயத்திற்கு வலிவும் வளமும் வனப்பும் தரும்படி கேட்டுக்கொள்கிறோம்.

நம்முடைய தமிழக அரசு, முற்றுகப் பழமையைப் போற்றும் அரசுமன்று. ஆனாலும் நலந்தரும் பழமைகளை இழந்துவிடவும் இந்த அரசு முன்வராது என்பதை அறிஞர் அண்ணா தலைமையில் தொடங்கிய அரசு நமக்கு நினைவூட்டியது. அமரர் அண்ணா, "இன்று நம்முன் உள்ள வினா, சமயம் வேண்டுமா, வேண்டாமா என்பதன்று. அது எப்படியிருக்கிறது? அது எப்படியிருக்க வேண்டும்? என்ற வினாவேயாகும்". என்று ஒருமுறை கூறினார். இந்த வினாவிலிருந்து நமக்குத் தெளிவாகப் புரிகிறது; நல்லறிவோடு தொடர்புடையதும், நம்பிக் கைக்கும் நல்வாழ்க்கைக்கும் உரியதுமாகச் சமயநெறி இருக்கவேண்டுமென்பது. நமது கலைஞர் அவர்களும் அந் நெறியினைக் கடைப்பிடித்து வருகிறார். திருக் கோயில் திருப்பணிகள் வழக்கம்போல் நடைபெற்று வருகின்றன. ஏன்! ஓடாத திருவாரூர்த்தேரே ஓடி யிருக்கிறது! ஆதலால், சிறந்த சமய மரபுகளைப்பேணி

வளர்க்கத் துணைசெய்யும் அரசின் முதல்வர் கலைஞர் அவர்களுக்கும், அவர்வழி நடைபயிலும் நமது மாண்பு மிகு அமைச்சர் சுப்பையா அவர்களுக்கும் மீண்டும் நமது நன்றியுணர்வோடு கூடிய வாழ்த்துக்கள்! அன்பில் என்ற பதியில் பிறந்ததாலல்லாமல் பழ நம் கேண்மை யால் அன்பில் என்ற பெயரைத் தமக்கே உரிமையாகக் கொண்ட மாநாட்டுத் தலைவர் அன்பில் தர்மலிங்கம் அவர்களுக்கு நமது வாழ்த்துக்கள்! ஆணையராகமட்டு மின்றி, ஆன தொண்டராகவும் விளங்கும் நமது நரசிம்மன் அவர்களுக்கு நமது நன்றிப் பெருக்குடன் கூடிய நல்வாழ்த்துக்கள்!

—



தி செளத் இந்தியா பிரஸ், காரைக்குடி. – போன்: 300.